சுத்தசக்தி யருளுக!

சுத்தானந்த பாரதியார்

பாடிய

# அறநூல்

(அறவழிப்புடன்)





(சுத்தப் பதிப்பு.)

புதுக்கோட்டை

இயற்கை யில்லத்தாரால்

வெளியிடப்பெற்றது

1929



[விலை அணா 3

## இயற்கை வைத்தியர்

ஸ்ரீமான். கி. லக்ஷ்மண சர்மா, பி.ஏ. பி.எல்.

இயற்றிய

மருந்தில்லா வைத்தியம் விலை ரூ. 1 12 0

---

இதில் அடங்கியுள்ள விஷயங்கள் :—

மருந்தில்லாவைத்திய மென்றால் என்ன ?

ஆத்தும தத்வம், தேக தத்வம், இயற்கை உணவு, சமையலின் ஒழுங்கு, போஜனநியமம், இயற்கைவாழ்வு, நோயின் உற்பத்தி, முற்காப்பு வைத்தியம், உபவாசம், பத்தியம், சூர்யவைத்தியம், ஜலவைத்தியம், உதாரணங்கள், பெண்கள் வாழ்க்கை, சிசு பரிபாலனம் முதலிய இன்னும் அநேக விஷயங்கள் அடங்கியுள்ளன.

இயற்கை இல்லம்,

புதுக்கோட்டை.



**Swami Shuddhananda Bharati**

சுவாமி சுத்தானந்த பாரதியார்

சுத்த சக்தி யருளுக!

# அறநூல்

(அறவழியுடன்)

ஆக்கியோன்

சுவாமி சுத்தானந்த பாரதி.

## உரிமை யுரை.

யார் அடித்துகள் அண்டங்க ளாயவோ,
யார் மகிழ்வி லனைத்து முயிர்ப்பவோ,
யாரு யிர்க்கெலாம் அன்புள வன்னையோ,
பாரி றைவி பராசக்தி யன்னவள்,
உரமும் ஈகையு முண்மையு மின்பமுந்
திருவி னல்லணி சேர விளங்குவாள்.
இருளு மின்மையு மேக மருந்தினை
யுருகிக் கேட்க வுதவின ளுத்தமி;
துறவி னின்பச் சுவையெனக் கீந்தனள்;
அறமென் னுள்ளத் தமர்ந்தளித் துய்வித்தாள்;
இறைவி யின்னடிக் கிவ்வற நூலினை
யுறுதி யன்பொ டுரிமைசெய் தேனரோ!

புதுச்சேரி

இயற்கை யில்லத்தாரால்

வெளியிடப்பெற்றது.

(சுத்தப்பதிப்பு)

1929.

விலை அணா 3.]

# THE ARANOOL.

I am delighted to write a short preface to this little work of my friend Swami Shuddhananda Bharati. I was greatly struck with the way in which he had worked out the Ethical principles of India to Modern life. By adopting the kural metre he has inevitably challenged comparison with the greatest work of Tamil literature. Most of our author's stanzas are so simple in style that one with any education at all can understand them.

Like the author of the Kural, he has dealt with practical life and its needs, and he has done so from the point of view of to day rather than that of yesterday. We venture to think that in the development of Indian Ethical thought, this book will occupy a distinct place. The Author is one who not only thinks but who also acts as he has been foremost in the application of his ideas. It is therefore with the greatest pleasure that I commend this book to the public in the hope that it may help them to think more deeply and truly about ethical problems and to apply the highest ethical principles in their daily life. We would like to suggest to School Teachers & Inspectors that they will find this book exceedingly useful as a moral text book for Schools.

H. A. POPLEY.

பரமாணுக்குள் எண்ணிற்
பல்லுலகும் வைத்த
வரமாம் அறநூல் வழி.

பா. ஆதிமூர்த்தி

# சிறப்புப்பாயிரம்

## திரு. வி. கலியாண சுந்திரமுதலியார் இயற்றியது.

அறமாவ தென்னே! அறமாவ தென்னே!
அறுத்தல் மாசினை, அறம தாகும்!
அறமே யாக்கம், அறமே உண்மை!
அறமே கடவுள், அறமே யெல்லாம்!
அன்று கல்லால் நின்றதும் அறனே;
பின்னைப் போதியில் மன்னிய ததுவே.
அச்செழும் பொருளே பச்சிளந் தமிழில்
ஊருணி புரைந்து பாருணத் திரண்டதும்,
இன்றதைச் சூழ நன்றுகொள் புலவன்,
அறவோன், அந்தணன், துறவோன், தோழன்
சுத்தா, னந்தன் சுத்தா னந்த
பாரதிப் பெயரோன் மாதன் அன்பால்;
இறைவே ராக, நிறைமன் ருக,
மன்குடி, கல்வி, முன்முயல், பொறைவழி
பாடு முதற்பல கோடு கவட்டுடன்,
ஈகை, உழவு வாகைப் பொருளே
தொழின்மணம் முதலிய தழையிலை அரும்பலர்
காய்கனி யாய்க்கவி வேய்நிழல் பரப்ப,
அறமாம் நிரைநிரை செறிய நூலெனுந்
தமிழ்ப்பொழி லமைத்தான், அமிழ்தம்!
புலவீர் ஈண்டுக புலன்கொள நுகரவே!

ஆசிரியர்.
நவசக்தி-சென்னை
5-5-27.

திரு. வி. கலியாணசுந்திரன்.

## மஹரிஷி வ. வெ. ஸுப்ரஹ்மண்ய ஐயர்

# முகவுரை.

ஸ்ரீ சுத்தானந்த பாரதி அவர்களின் அறநூல் இன்று தமிழ் மக்களுக்கு இனியதோர் விருந்தாக அளிக்கப்படுகிறது. பக்திவிசுவாசமும், சிரத்தையும், மௌன விரதமும் பூண்டு இந்நூல் அருளப்பட்டுள்ளது. சிறுகிய வாழ்வும் பெருகிய நோக்கும் ( Plain living and High thinking ) என்ற பழமொழிக்கிணங்க, வாழ்க்கையையே தவஞ்செய்யக் கிடைத்ததோர் நிலைக்களமாகக் கொண்டொழுகும் ஸ்ரீ பாரதியாரின் நூல் நம்மனோர்க்குப் புதிய வழிகாட்டியா யமைந்துள்ளது. இந்நூல் இவர் எழுதிய "பாரதசக்தி" யென்னுங் காவியத்தின் ஒரு பாகம். ஈரடிக் குறள் வெண்பாவில் எழுதப்பட்டிருக்கிறது. ஒவ்வோரியலுக்கும் ஐந்து அதிகாரமும், ஒவ்வோரதிகாரத்திற்கு ஐந்து குறளுமாக வகுத்த பதினைந்து இயல்களைக் கொண்ட சிறந்த நீதிநூலாகத் திகழ்கின்றது. உலகத்தில் இதுவரை தோன்றியுள்ள மஹான்களின் கருத்துக்களையும் ஆசிரியரே நேராகக் கண்ட உண்மைகளையுந் தன்னுள்ளடக்கி, இது தமிழ் மக்களுக்கு அறிவு கொளுத்தும் சிறந்த கிரந்தமாக விளங்குகிறது.

நூற்றுண்டுகள் செல்லச் செல்லப் புதிய சந்தர்ப்பங்களும், அவற்றிற் கேற்பப் புதிய தர்மங்களும் தோன்றுகின்றன. இப் புதிய சந்தர்ப்பங்களுக்கேற்ற புதிய தர்மங்களையெடுத்துக்காட்டப் புதிய அறநூல்கள் தோன்றவேண்டியது இன்றியமையாததாயிருக்கின்றன. உதாரணமாக, இந் நவயுகத்தில் சமத்வம், சகோதரத்வம், ஜன ஆட்சி முதலிய தர்மங்கள் தோன்றியிருப்பதால் அறிவாளிகள் அவற்றின்

இயல்புகளை ஏனையோருக்கு எடுத்துக் காட்டவேண்டி யிருக்கிறது. ஆகையால் இவ்வறங்களை விவகரித்து அவ்வவற்றிற்குரிய ஸ்தானங்களில் அவ்வவற்றை வைக்கும் இந் நீதி நூல் வாளா எழுதப்பட்டதாகாது. மற்றும் அது தமிழ் நாட்டில் ஏற்பட்டுள்ள ஓர் ஆவசியகத்தைப் பூர்த்தி செய்கிறது.

சுதந்திரம், தேசபக்தி, குடியரசு முதலிய விஷயங்களைப்பற்றி இந் நூல் பரக்கப் பேசுகிறது. பழைய உண்மைகளைப் புதிய யுகத்திற் கேற்றபடி வியாக்கியானஞ் செய்கிறது. முக்கியமாக மஹாத்மா காந்தியின் செந்நெறிபற்றிச் செல்லுகிறது. கை நூலாடை யுண்டாக்குதல், பயிர்த்தொழில் இவையிரண்டுமே நாட்டின் அழிந்துபோன செல்வத்தை மீண்டும் சேர்த்துத்தர இருக்கிறது என்பதை வற்புறுத்திக் காட்டி, இந் நூல் நம்மனோர்க்குத் தைரியமும் விடா முயற்சியும் போதிக்கிறது. விரிவான நோக்கமும், சமரஸ உணர்ச்சியும் நிறைந்த இந் நூலைத் தமிழ் மக்கள் ஆதரவுடன் ஏற்று, அதனுட் பொதிந்து கிடக்கும் உண்மைகளைச் சாட்சாத்கரித்து அனுசரிக்கவேண்டு மென்பதே எமது விருப்பம்.

ஆசாரியார்
பாத்வாஜ ஆசிரமம்
சேரமாதேவி
மாசி ௴ 10-௳
கலி 5026.

வ. வெ. ஸுப்ரஹ்மண்ய ஐயர்.

# அட்டவணை

பக்கம்.

சுத்தசக்தி யருளுக!

எல்லா வுலகிற் கிறைவ னொருவன்.
எல்லா வுடலும் இறைவனா லயமே.

# 1. கடவுளியல்

## 1. கடவுள்

அவனிக் கொருமுதலாய்,* ஆருயிரு ளானை,
எவையுமளித் தானைநீ யேத்து.
பெயர்வடி வாதியதோர் பேதங் கடந்த
வுயர்பொருளொன் றுண்டென் றுணர்.
பலர்பற் பலவாகப் பாரிற் பகர்வர்;
உளனொருவ னென்றே யுணர்.
எவையுமுவந் துய்யவொளி யீயும் † பகலோன்,
‡ இவருங் குணம்போல் இறை.
§ எண்குணத்தான், ஏகனே, எல்லாம் அடங்கவுளான்;
புண்ணியனும், போதப் பொருள்.

## 2. கடவுட்டன்மை.

* உருவைத் தொழுதெண்ணி யுள்ளொளியைக் கண்டே,
உருவிலொரு தேவை யுணர்.

* ஆர் + உயிர் + உளானை = ஒளிரும் உயிர்களிலெல்லாம் இருப்பவனை. † சூரியன் ‡ (ஸமரஸமாக) பரவும்.

§ எண்குணங்களாவன:— மாசறுதூய்மை, வரம்பிலாற்றல், பேரறிவு, முற்றுமுணர்தல், வரம்பிலின்பம், இயற்கையுணர்வு, தன்வயத்தனுதல், இயல்பாகவே பாசம் நீங்கல்.

* நடமாடுங் கோயில்களான ஆருயிர் வழிபாடு.

மகிழ்விற் படைத்தளித்து, மாற்றுங் கடவுள்;
அகத்தூய்மை யாலே யறி.

வாய்மை, நலனேன்பு, † வன்றொண் டடக்கமிவை,
‡ தூயோனைச் சேருந் துணை.

காமம் § வெகுளி ¶ கலக்கமி லாதமனச்
சேமத்தி ஞலிறையைத் தேர்.

ஈசன் றிருமொழியை யெவ்வினர்தாஞ் சொன்னாலும்,
ஆசையுட னேநீ யறி.

## 3. பிறப்பு.

§§ஒன்றென்றுந் தோற்றம், ஒடுக்கமதி லேயென்றுங்
கண்டோனே கண்டோனுங் காண்.

வினையளவே தோற்றம்; விமலனரு ளாலே
யனைத்துயிரும் வீடடைத லாம்.

ஒவ்வோ ருயிரும் உலகின் வினைக்கணியாய்த்
தெய்வம் படைக்குமெனத் தேர்.

ஆணும், * நிறைமகளும், அன்னர் உரிமையிலே;
† மாணிறைவன் மாட்சிப் படைப்பு.

சாதிநிறங் கோவறிஞன் ருமிலையோர் தந்தையருள்,
பேதமிலா தெல்லாம் பெறும்.

† உறுதியான அருட்பணி ‡ சுத்தன், கடவுள். § கோபம்,
¶ மாயை. §§ கடவுளின் மூலசக்தியே உலகின் தோற்ற மொடுக்கத்திற்குக் காரணம்.

* கற்புள்ள பெண். † பெருமையுள்ள கடவுளின் சிறந்த படைப்பு.

## 4. உலகு.

உயிர்மேனி யாக்கொண்டே யோங்குமொரு சோதி,
* பயிலா லயமுலகு பார்.

† ஒருதார் இப்புவியோர்; ஒவ்வோர் நலமெனதிச்
சிருலகென் நாடென்றே செப்பு.

போக்குவர வில்லையேற் பூவில்லை; நாடுகளின்
சேர்க்கை யுலகிற் சிறப்பு.

உலகிற் பணிசெய்ய வுண்மை தெளிய,
நிலவுமிச் சென்மம் நினை.

புவித்தாய் தரும்பலனைப் போதியன வாக,
அவரவர் துய்த்தல் அறம்.

## 5. நாடு.

வீடுகளி னீட்டம் விரிநாடாம்; ஆதலினல்,
வீடென்றே நாட்டை விரும்பு.

முயல்வோர், அறவோரும், * முன்னுநற் செல்வர்,
பயிலிடமே நாடாகும் பார்.

நாட்டையே நின்மனைபோல் நாடிநலஞ் செய்தாலே,
நாட்டலாஞ் சால நலம்.

அறிவு, தொழிலுரிமை, ஆக்கம், வளமும்,
† விறல், நாட்டின் வெற்றி விளக்கு.

நன்மையிலா வெவ்வினையும், நாட்டையே தாக்குவதால்,
தன்வாழ்வில் தூய்மை தலை.

அறநூல், கடவுளியல் முற்றிற்று.

* நடமாடும். † சகோதரர். * நல்வழியில் ஈட்டிய கல்வி, பொருள் புகழ் ஆகிய செல்வர். † வீரம்.

# 2. அறவியல்.

## 1. அறஞ்செயல்.

போக்கும், வரவும், பொழுது மறியோமால்,
யாக்கையோ டேசெய் யறம்.

உன்னுயுள் செங்கதிரோன் உன்னுநாள்; வாளறுப்பன்,
மன்னுமறஞ் செய்ய மதி.

இறந்தபின் மக்கள் இயற்றுமற மெல்லாங்
கறந்தபின் கன்றூட்டல் காண்.

* அந்தண ராகலாம், எல்லா மறனின்றுஞ்
செந்தொண்ட ரென்னச் செயின்.

† தன்னறம் மேன்மை: ‡ தவிர்ந்தோ னறமச்சம்;
பின்னு மிடரும் பெறும்.

## 2. அறவிரிவு.

* தொடர்ந்தாரின் றுன்பந் துடைக்காத செல்வன்,
கடமை வழுவியோன் காண்.

அறஞ்செய்க; தீதுறின் ஆண்டவனே வந்து,
மறங்காய்ந்து காப்பான் மகிழ்.

எவ்வெவ் வுலகத்தி னின்னலமோ, அந்நலத்தை
யவ்வுழி யாற்றல் அறம்.

* சாதியந்தணரில்லை; பிறப்பினல் அந்தணன் என்பதை ஆசிரியர் கொள்வதில்லை. அறமும், செந்தண்மையும், அருட்பணியுமே அந்தணன் என்ற உயர் மனிதனுக்கு அழகு. அத்தகை மனிதனே அமரன். † அவரவர் இயல்பிற்கேற்ற உயர்வினை: ‡ பிறன்
* சகோதரமக்கள்.

நீக்க வடிமை; நிலவுஞ் சுயேச்சையினால்,
தாக்க மிடியிருளைத் தான்.

ஆராய்ந்தே யார்க்கும் அளியுற்றே யின்புருவாய்,
நேராய் நடத்தல் நெறி.

## 3. அறநலம்.

நலநாடிப் பேசிடுமெந் நற்செய்கை யோர்க்கே
யுளதெல்லா மாங்கும்; உணர்.

உணர்ந்து வருந்திடுமெவ் வாறுசெய் யாமை,
* சிறந்த குணந்தந் திடும்.

படித்து மறிந்தும், பழுதறுநல் லாற்றில்
நடப்போனைச் சேரும் நலம்.

இருக்கக் குடிசில்; இறந்துண்ணு தோர்செய்
அரைக்குகதர் தூயதுயில் ஆள்.

பிறருய்யத் தான்வருந்தும் பேர்வாழ்வே வாழ்வாம்;
அறமும் இதுவே யறி.

## 4. அறத்துணிவு.

பூவின்பங் கீழேயாம்; † பொன்பூ நடுவே; மற்
றோரின்பம் நாடலே யூங்கு.

மனத்தில்மெய் யென்றே மதிசெவ் வினையை,
எனைத்தாலும் போற்றி யியற்று.

உண்மை யெனவுணரும் ஓர்கருமம் பற்றிவரும்
இன்னா பொறுக்கே யியற்று.

* சிறந்தகுணம். சத்தநிலை, பூரணத்தன்மை.
† சுவர்க்க இன்பம் நடுத்தரமானதே.

எதுதி தெனநோக்கி யெள்ளற்க; நன்மை
யதுபோற்றல், ஆற்றல், அறிவு.

சாந்தம் ஒளியியும்; சஞ்சலந் திததனே
ஆய்ந்தவனே நல்லறிவோ னும்.

## 5. சமதர்மம்.

கிண்மேற் பிறர்தானுங் கேண்மை தெவ் வொன்றென
காண்போன் கருணைக் கடல். [வே

அற்பம் பெரிதென்றே யெண்ணுதே யன்புசெயும்,
நுட்ப வறிவுடைமை நோன்பு.

எந்த வகுப்பினரும் என் சமூகக் கையென்ற,
சொந்தநாட் டன்பே சுகம்.

தாயன்பைக் காட்டியே, தான்பிறரென் றெண்ணுதான்,
நேயன் உலகிற்கே நேர்.

தன்னுட்டைச் சீருடனே தான்போற்றி மற்றோர்நா
டெண்ணுக்கால் ஏதே யிகல்?

அறவியல் முற்றிற்று.

---

# 3. துறவியல்.

## 1. துறவு.

மனத்தி லருண்மல்கி, மானுலக முய்யுந்
தனைத்துறந்த தொண்டே தவம்.

தேவென்றே யிவ்வுலகைத் தேர்ந்து தனைமறந்த,
தூய்வினை யாற்றல், துறவு.
எல்லா வுயிருள்ளும் ஈசனையே கண்டுவப்போன்,
நில்லா நெறியொன்று மில்.
அடக்கம் பொறுமை யருட்டொண்டே சான்றோர்
உடுக்கும் உளமே லுடை.
போனதுயர் வந்த, வரப் போவனவும் எண்ணாரே,
ஆண்மையர், சாந்தர்; அறி.

## 2. மனம்.

உறுதி பயமின்மை யுண்மைசெறி யுள்ளம்
அறிவே யகல்பூவிற் காம்.
சினத்துடனே மண்ணைச் செயிப்பதினுந் தங்கள்
மனமடக்கி வாழ்தலே மாண்பு.
கப்பற்குச் சுக்கான் கருத்தி னுறுதிநிலை
தப்பாதே; இன்பந் தரும்.
நினைப்பி னுருவே நிசமாகும்; நல்ல
நினைப்பு தனையே நினை.
தினி முயக்கினிலே செல்லாதுன் வாழ்க்கையே
ஞான முயற்சிவழி நாடு.

## 3. மாயைவெல்லல்.

அழகெனக் காட்டி யடிமை தருவ,
முழுதும் விலக்க முயல்.
கூற்றும் பகைவணங்கல்; கொள்கையால் வென்றிடுதல்,
ஆற்றலுள் எல்லாம் அணி.

பற்றென்றுந் துன்பமாம்; பற்றறல்பே ரின்பமாம்;
* அற்றே மறைகள் † அமைப்பு.

பந்தமில் நெஞ்சே பரந்துலவும்; அஃதறினே,
அந்தமில் சோர்வாம் அகம்.

எங்குற்றோம், என்னசெயல், எங்குசெலல், என்றறி
‡ கங்குற் கடல் கடந்தோன் காண். [வோன்

## 4. மனத்தழுக்கு.

சினம்,வெறி * கூரந் திருட்டிகல், †சார்பும்,
மனத்தை வருத்தும் மலம்.

ஆசை பொறாமை யகிலப் பிணிக்குமுதல்;
நாசி; வருமே நலம்.

புலத்தால் நசையாகும்; ‡ புன்னசையால் தீதே
யுளத்துறைந் தியுமாம் ஊறு.

துயில்மடிநோ யுங்கவலை சோம்பல்நா ணுமை,
மயலிகலும் வாழ்வில் வசை.

ஆடித் துகள்நீக்கின், அம்முகமே காணுவபோல்,
நீடுநசை போக்க நிசம்.

## 5. துறவி.

துயிற்கு முணவிற்குந் தொத்தடிமை யாகான்,
செயலென்றுஞ் சித்தி செயும்.

நிலைக்கு நலநாடி, நீளவா தாண்டி
யுளத்தூய்மை யாலே யுயர்.

* அத்தன்மைத்தே. † அனுபோகம். ‡ இருள் மாயை.
* பொறாமை. † அடிமைத்தனம். ‡ அற்பமான ஆசையால்.

ஆசை யழுக்கில்லா வைம்பொறியைச் செற்றவனே,
ஆசான் உலகிற்கே யாம்.

களிப்பன்புத் தொண்டுநலம் † காட்சிபொறை யோடுள்
ளொளிகண்டோன் மாட்டே யுலகு.

‡ பொன்று வொளிமெய்யாம்; பொய்யுடலென் றேயறி
என்றும் இடும்பை யிலை. [யின்,

துறவியல் முற்றிற்று.

† அறிவு. ‡ அழியாத ஆன்மவொளி.

---

# 4. சக்தி யியல்.

## 1. சக்தி.

திண்கருத்தின் சக்தியெழில் சேர்ந்த தவத்தோர்க்கிங்
கென்செயலும் ஆற்றல் எளிது.

கல்விசெல் வத்திடையே காணுந் தகைமைத்தே
நல்லுயிர் * மெய்யேண் நலம்.

ஒற்றுமையி னற்றே யுயர்வெற்றி யஃதொன்றைப்
மற்றுநா டேதே பகை.

வாய்மை, பகையாமை, மாட்சியே, சாந்தமிவை
காய்வானைக் காய்படையாங் காண்.

பஞ்சம், படைசேர் பகையுஞ் சிறையெதுவும்,
அஞ்சானை வெல்லல் அரிது.

* மிருகபலம்.

## 2. சாந்த வெற்றி.

பொறை,மெய் பகைவெல்லும்; பொன்று நலமாம்;
தகைசால காந்தியே சான்று.

வாழ்க்கை * மிருதியாம் † வாரம்; பொறையுண்மை,
ஆழ்வினை வெற்றியின் ‡ ஆறு.

ஆற்றல் பொறையளவே யாகும்; அதுவுடையோன்,
ஏற்றம் பெறுமெங்கு மெண்.

இடர்க்கும் நலஞ்செய்யும் இன்வாழ்வி னோரே,
அடக்கவே ஐம்புலனை யாம்.

நோவுறினும், நோவீயா, நுண்ணறிவன் சீலனும்;
ஆவன் அமரன் அவன்.

## 3. வாய்மை.

என்று முளதாமெய்; ஏற்றமாம்; சான்றோரின்
நன்றுசெய் நல்வழியாம்; நாடு.

புறத்தூய்மை செய்யும் புனல்போல வுண்மை
மனத் தூய்மை செய்யும் மருந்து.

வாய்ப்பேச் சடக்கவே * வாசி திறந்திட்டுப்
பாயுமெய்ப் பேறிவு பார்.

இயற்கையின் புத்தகமே யின்பாக நோக்கின்,
பயக்கும் அறனும் பயன்.

வாய்மை பயனுள மாற்றம்; அதுவின்றேல்,
வாயல்ல சொல்லு வது.

* ஸ்மிருதி, அறநூல். † அன்பு. ‡ வழி.

* நற்குணம், யோகவாசி, இசைக்குழல். மௌனத்தால் மூச்சு அளவெய்தி சுழிமுனை நாதந் தரும்.

## 4. கூற்றஞ்சாமை.

புதுமெய் வருமகிழ்வே பொன்றலி லல்லால்,
எதுவெகுளிக் கேசொல் இடம்?

நாளை யிருப்பதுபொய் நாமென்றே நற்செயலை
வாழப் புவிக்கு வழங்கு.

உண்மைக்குத் தொண்டுசெயும் உத்தமர்க்குஞ் சாவுண்
திண்மையிலாத் * தௌவைக்கே தேர். [டோ?

நலத்தாற் புவிமனதுள் நாடிபுகு நல்லோன்
இலனுவன் கூற்றின் இரை.

இறந்துங் கரும மிருப்பதனுற் பின்னர்,
பிறந்தே யலையுமுயிர்ப் † பெட்பு.

## ௫. சுயேச்சை.

ஆண்மை தனதே; அடிமை பிறனுட்சி;
* மாண், நோ வதன்கண் மதி.

கறுக்கும் அடிமைக் கலிதீர்க்க லாற்றுன்
பெருஞ்செல்வத் தாலென்னே பீடு?,

தன்னுடையூண், நற்றொழிலால், தானே யடைந்தக்கால்
உண்மை யுணர்ச்சி யுறும்.

தந்தையே யேனுந் தகவில செய்தக்கால்
முந்தவர் கூட்டு முனி.

சோர்வு விடுத்துச் சுயேச்சை யடைந்துலகில்
வீரனாய் வாழ விரும்பு.

சக்தியியல் முற்றிற்று.

* மூதேவி. † ஆசை. * சிறப்பும், துயரும்.

# 5. தொண்டியல்.

## 1. வினைமாட்சி.

மா,மனிதன், தேவென்னும் வாழ்க்கைப் படிகளுள;
தாம்செய் வினையே தரும்.

தேவர் நாகருஞ் செய்யும் வினையாலே
யாவர் இதனை யறி.

கிளை,நாடும், இவ்வுலகுங் கீர்த்திவினை யெய்தின்,
உளமகிழும் ஈசன் உணர்.

தொண்டா லுறுமகிழ்வே தொல்புவியுஞ் செய்தோனும்
அண்டரும் போற்றும் அமிழ்து.

தன்னயமுந் தற்புகழுந் தான்கருதா நற்பணியே
பன்னும் மறை; செய் பணி.

## 2. வகை.

தன்னையிடங் காலவகை தான்கருதிச் செய்வினைகள்
மன்னுசெய மாகும் மதி.

தன்னற் றிருவினையைத் தானடங்கி யேமுயலின்,
பின்னை நலஞ்செய்யும் பேறு.

காக்கையிடம் பாட்டைக் காக்குங் குயில்போலே,
ஆக்கநலஞ் சூட்சிபல வாற்று.

பின்னே வருவதனைப் பீடுபெற முன்னுய்ந்தே
யென்றும் புரிதல் இனிது.

நான்முன்னே யென்னவா நாடற்க ; ஓர்வினையை,
ஆழ்ந்துசெயும் ஆற்றலிலா தாங்கு.

## 3. வினைத்தேர்ச்சி.

ஏழைகளுக் கூணுடையும், ஏனையோர்க் குத்துறவுந்
தாழக் கொடுத்தல், தலை.

நாட்டி னடிமையும் நல்குரவும் நீக்கிடலே
வீட்டைத் தருமே விரும்பு.

பேச்சில்லை; * மூச்சில்லை; பீடுடனே தான்பிறரில்
பேச்சில் வினையே பெரிது.

தானேவா நோவிக்காத் தன்வினையா லேசெல்வன்
ஆனோன் மகிழ்வான் அகம்.

ஒருண்மை தேர்ந்தே யொழுகு முறுதியனை
யிருலகு மேத்து மிசைந்து.

## 4. நல்வினைப்பயன்.

சொல்லிற் குறைபோலத் தோன்றி நிறைதருமே,
பல்லுயிர் வாழும் பணி.

அழுக்காறு டேயிருள்பே ராசையும் போக்கும்
இழுக்கில் கருமம் இனிது.

நல்வேலை யேசூழ நாளு, மிருப்பாயேல்,
பொல்லா வினையெல்லாம் போம்.

வினைத்தூய தன்மை விளைவிக்கும் வாய்மை;
நனிச்செல்வம் வாழ்க்கை நலன்.

காலை யெழுந்து கருமந் தொழுதிடுமச்
சீலருட் சேருந் திரு.

* சுவாசபந்தனத்தாலும் பெருமையில்லை.

## 5. கடமை.

தன்றம் வினையாற்றித் தாம்பிறரை யெள்ளாத
வுன்னத வாழ்வை யுறு.

ஊனுடைக்கே நாளை யுதவாம லுண்மையாம்
மாண்சேவைக் கிந்தே மகிழ்.

விட்ட கடமையை வெற்றியுடன் செய்யபிறப்
புற்றதுன் றன்வினையை யுன்.

பார்முழுதும் ஓர்குலமாய்ப் பண்புடனே வாழ்ந்திடவுன்
சீர்கடமை நேர்பெறவே செய்.

செல்வ முனிந்துஞ் சிறைபுக்குஞ் சீர்மையுடன்
நல்லோர் உழைப்பர் நயந்து.

தொண்டியல் முற்றிற்று.

---

# 6. ஒழுக்கவியல்.

## 1. நற்பழக்கம்.

தெய்வ மிகழற்க; தேவரெதிர் சொல்லற்க;
பொய்புக லற்க; புகழ்

* செய்த, செய வுன்னுஞ் செயலைத் துயில்விழிமுன்,
எய்துமே யெண்ணு மியல்பு.

* செய்ததை எண்ணி யுறங்கு; செய்யப்போவதை எண்ணி, எழு.

உறங்குமுன் குற்ற முணர்ந்தே, † ஊறற்றே,
இரங்குமனத் தோடே யெழு.

தாழ்மை யடக்கமருள், தன்னுதவி, நாகரிக
வாழ்வு பயக்கும் வகை.

உலகநடை தேர்ந்தே, உயாறனே செய்வான்,
பலகற்றே ரூவானே பார்.

## 2. அன்பு இன்சொல்.

அன்பின் வடிவேயாம் ஆன்மா; அதுகாட்டின்,
வன்பகையும் நட்பாய் வரும்.

அன்பெண்ணம், ஏற்ற மளிக்குமே; வெஞ்சினத்தி
னெண்ணமே யாக்கும் இகல்.

இன்சொல்லி னில்லை இயம்பின் இணங்காரின்
வன்சொல்லை மாற்றும் மருந்து.

கன்மீது கூர்செய்யுங் கத்திபோல், வன்சொல்லில்
இன்சொல்லைக் கூர்செய் யினிது.

விருப்பினிய சொல்லேயாம் வெம்பகைவன் கோப
நெருப்பை யவித்திடுநன் னீர்.

## 3. இன்னுத செய்யாமை.

இன்னுத செய்யாமை என்னு மொழுக்கத்தில்
மன்னுயிர்க் கெல்லாம் மறை.

இக்கணமோ, பின்னே, இறக்குமுட லால், மாபோல்,
துக்கம் விளையேல், துணிந்து.

† குற்றமற்று.

மக்கட் குணமாம் மனத்தில் இரக்கமிலா,
மக்களும் * மாக்கள் மதி.

கதறவே கொன்றதனைக் † கைதொட்டார்க் கன்போ?
மதுவுண்பார்க் கேதே மதி?

கூற்றும் இடுகாடுங் கூடிய மாக்களே,
நாற்றவுட லுண்ணும் நரர்.

## 4. தீயன விலக்கல்.

தசை,காமஞ் சூது,கொலை, ⁎ தா,களவு, தம்மால்,
வசைபாவ மெல்லாம் வரும்.

புறங்கூறி வாழ்ந்திடுமப் புல்லரையே யோர்நாள்,
இருமருங்குஞ் சூழும் இகல்.

தற்பெருமை சொல்லியே, தற்புன்மை காட்டிடுவோன்,
எற்பெருமை கண்டா னியம்பு.

ஊமைபோ லத்தோன்றி யுள்ளக் கவடுடையான்,
தீமை தருபுலியே தேர்.

கொள்ளலே தீதாம்; கொடுத்தலே மாண்பாகும்;
எள்ளல் இழிவென்றே யெண்.

## 5. சீர்மை.

மாற்று னிடும்பையை மன்னித்தே தான்மறக்குஞ்
சிற்றமிலான் சீரியனே தேர்.

தன்பிழை போக்கிப் பிறர்பிழை தாங்குவனை,
அன்பும் அடிவணங்கு மாம்.

* விலங்குகள் † உண்டார்க்கு. ⁎ தீமை.

கொல்லேன், விழையேன், குடிகளவுஞ் சூதெண்ணேன்,
பொய்யேன்யா னென்றுறுதி போற்று.

சீரியரின் கேண்மை சிறிதுதான் கொண்டாலும்
பேரியல் நற்பயனும் பேறு.

வேறு வறியோர்க்கும், வேண்டுதுணை தாமேகிச்
சீரியரே செய்வார் சிறந்து.

ஒழுக்கவியல் முற்றிற்று.

---

# 7. கல்வியியல்.

## 1. உண்மைக் கல்வி

அறிவொழுக் கந்தெழிலோ டாற்றற் சுவைசேர்
அறிவே யறிவுள் ளணி.

அறமொழியே பெண்ணில்லா தாய்ந்தென்? அதன்வாய்
சினமொழித்து நிற்றல் சிறப்பு.

இராப்பகல் கற்கினும், இல்லையூங் காகிடுமே,
ஆராய்ப்போ டாசைவிடா தாங்கு.

புலனைவென் றோனே புலவனும்; நூலால்
வுலகை மிரட்டுவோ னூன்.

இன்னு மினுங்கற்க வெத்தனையோ நூல்களினுள்,
வுண்மையொன் றேயறிதல் ஊங்கு.

## 2. போலிக்கல்வி.

மெய்யும் அறிவுடனே மேலா முறுதிபெறாப்
பொய்க்கல்வி யாலென் புகழ்?

அருளில் லகத்துள் அடைபடுநூற் குப்பை,
இருள்வீட் டடசலென் றெண்.

மனப்பாடஞ் செய்ததில் மாண்பில்லை; உள்ளக்
குணத்தாலே மாண்பைக் குறி.

செருக்கில்லாச் செம்மனமே தேறுமுயர் நூலைத்
தருக்கக் கலையோன் சமர்.

* ஒப்புரவே யோராதான் ஓதிய நூலெல்லாம்
இப்புவியிற் செல்லாதென் றெண்.

## 3. ஆசான், சீடன்.

ஆசான் கொடுத்த வழியா விளக்கொளியே
காசினிக் காகுமுளக் கண்.

பெற்றோ ருடலீந்தார்; பேரறிவா லீந்துயிரைக்
குற்றங் களைந்தான் குரு.

நாடி வணங்கியே நற்சேர்க்கைத் தொண்டுடனே,
சீடன்மெய் கற்றல் சிறப்பு.

சீர்கடமை நாட்டுச் சிறியோரை யோதுவிப்பான்,
ஆருலகி லேற்பான் அறி.

அழகுநிறை யாசானுக் கன்புடைமை யீங்கே,
பழகிடலே நல்லறிவைப் பண்பு.

* பிறர்க்குதவல்.

## 4. கல்வியும், வாழ்க்கைப் பயனும்.

குற்றங்கள் தோயானே கற்றோன்; குணமில்லான்
கற்றிடினுங் கல்லானே காண்.

கல்வியொடு வாழ்வுநலங் காணின், கலைமகளுஞ்
செல்வியுஞ் சேருஞ் சிறப்பு.

அருட்பொருளும், யாப்பும், அணிகவிபோற் கல்வி
யருட்பணியி னோடே யமைப்பு.

தூயவாழ் வின்னொளியால், தோன்று தொழியவிருள்
ஏட்டொழி லால்மிடியை எத்து.

வாய்மை, முயற்சியொடு, வாழ்வுநல நன்னினைவுந்
தூய்மை, யறத்தின் றுணிபு.

## 5. பிரமச்சரியம்.

* வன்னி யறத்தின் வழிநின்றே வாழ்வினிலே
யின்னிய வெல்லா மியற்று.

வன்னிப் பருவத்தை வாகாகக் காத்தோர்க்கே,
துன்னுமே தானுப் சுகம்.

இன்கல்வி தேர்ந்தே யிருபத்தோ டைந்துவரை,
வன்னியாய் நிற்றல் வழக்கு.

வன்மை நலமொளியும் வாய்ந்திடலால் வாழ்வெல்லாம்,
வன்னியற மேன்கொள்ளா வாறு?

மணந்துமே வன்னியற மாண்பாகுந் தூய
வுணர்வும், வினையு † முறின்.

கல்வியியல் முற்றிற்று.

* பிரமச்சரிய தர்மத்தின். † சேர்ந்தால்.

# 8. இல்லறவியல்

## 1. இல்லறம்

இல்லறம் ஈசனருள் எய்தியநல்லறமஃ
தில்லேற்பூ வில்லையாம்; எண்.

இல்லறமே வீட்டின்பம்; இல்லாளும், நல்வாழ்வும்
புல்லிய தாயின், புகழ்.

அகப்புறத்தில் இன்னியளா யாகுமனை சேரின்,
இகவாழ்வின் ஏதே யினிது!

வள்ளுவர் இல்லறம்போல் வாய்க்கின், மணமினிதே;
இல்லையேல், நற்றுறவை யெண்.

வாழ்க்கைத் துணையை வழிக்கூறின் இல்வாழ்வாம்
ஆக்கம்; அறத்தின் அணி.

## 2. மனைவி.

மென்மை யுடலின்பம், மேதக்க வாழ்வணியிற்
பெண்மையின் உண்டோ பிற?

அறமன்பும், ஐங்கடனும், ஆற்றிடலுக் காதி
நிறைமனைவி யாகும் நினை.

நல்ல குணமணியாய் நாணுடுத்த நல்லாளைக்
கொள்ளுக வன்றே குறித்து.

புன்னகையும், மின்னொளியும் போதவருள் பூத்தினிய
நன்னிலையும், நங்கைக் கழகு.

உணவு முயக்கிற்கே யுன்மனைவி யில்லை;
அணங்கவள் வீட்டின் னணி.

## 3. மனையொழுக்கம்.

குணமே நடுசுவையுங் கோமளமும், நாணும்,
மணமாத ரார்க்கு மதிப்பு.

அட்டலும், நூற்றல், அணிபா, கடனீர்மை,
கற்றலும் பெண்டிர் கடன்.

கொழுனன் வகுத்த குணநெறியில் நிற்பாள்,
தொழுநோன்பு வேறுண்டோ சொல்?

பகட்டணி கொள்ளாள்; பதிக்கணி யாவாள்;
அகத்திற் குரியாள் அறி.

கற்புயிர்; நாணழகு; காரிகைக்குத் தன்கணவன்
சொற்படி நிற்றல், சுகம்.

## 4. இல்லான்.

இல்லாளை யன்பா லிணக்குவன செய்யாக்கால்,
இல்லாள னுக்கே யிழிபு.

பெண்ணி னினைப்பையே தன்னினைப்பாய்ப் பெறுமேற்
என்னபய னீயும இல்? [கின்,

மனையிடமே காதலாம்; மக்களிடத் தன்பாம்;
அனைத்திடமும் நாட்டுன் னருள்.

கொள்க வொருமனைவி; கோதற்று வாழ்; இலதேல்,
நில்கநீ காதலத்த னின்று.

† அயல்சார்தல் ஆண்மை யறன்போக்கும்; அஃதைத்
துயிலினுந் தூயர் தொடார்.

† பிறர்மனைநாடல்.

### 5. விழைவு.

அயல்சார் * விழைவை யடக்கவாற் ருதான்
செயல்மணத்தை யன்றே சிறப்பு.

பிறனில் விழிக்கும் பிணியொருவன் வாழ்வினையே,
நரகில் அழுத்தும் நமன்.

இளமை யெனினும், இடமிற்பெண் ணாசை
பெருமை யழிக்கும் பிணி.

நிலவு, § சிறு காற்பா, ‡ நிறமா ரியற்கை,
இலவாமே காமிகளுக் கின்பு.

காத லெனுமெண்ணங் காலத்தா லோங்கியே,
வீத லடையுமாம் வீண்.

இல்லறவியல் முற்றிற்று.

* காமம். § தென்றல்.
‡ பலநிறங்கள் அழகுசெய்யும் இயல்வனப்பு.

---

## 9. குடும்பவியல்.

### 1. குடும்பம்.

உணவுவயிற் றிற்காம்; உயர்பெற்றோர் வாழ்க்கை,
உணவுமகர் வாழ்விற்கென் றோர்.

பெற்றோரின் வாழ்க்கையாற் பெற்றசே யின்குணமாம்;
பெற்றோர்க்குத் தூய்மை பெரிது.

பெற்றார், பிறந்தார், பெருங்கிளையைப் போலுறவே
யுற்றமனை நாடுலகிற் குண்டு.

ஊர்க்குச் செலவல்ல; உள்ள செயற்கேற்பச்
சீர்வழியிற் செய்தல் சிறப்பு.

சுற்றமே ஐம்புலனுட் டோய்ந்துவாழ்க் கைத்துணையாஞ்
சுற்றமே சுத்தமுறத் துன்.

## 2. தந்தை.

தந்தை செயலே, தனயன் செயலாகும்;
தந்தைக்குத் தூய்மை தலை.

ஞான முடல்வலிமை நல்குதல் தந்தையுடன்
ஈனுந்தாய் ஏற்குங் கடன்.

இன்றுசேய்; நாளையே யிப்புவியின் கையாகும்;
என்றதனைப் போற்ற விசை.

கடிமணந் தன்றன் கருத்தேயா மல்லால்,
இடராகுங் கட்டாய மில்.

தன்சுகத்திற் கேயல்ல; தாய்நாட்டின் றொண்டிற்கே
யுன்சேய் பிறப்பா முணர்.

## 3. தாய்.

தாய்மாரின் கண்ணாகுந் தன்னாட்டின் சீர்மையெலாஞ்
சேய்வடி வாகச் செறிந்து.

வீர மகனையே யீன்றெடுத்த மெல்லியட்டு,
வேறுதவ மேனோ விளம்பு.

தாயிற் பெரிதுண்டோ, தன்சடல வாலயமே,
தூய்மை பெறச்செய் துணை.

சோறூட்டும் போதன்பாய்ச் சொல்லிவாழ் வின்கடமை,
வீரத்தாய் ஊட்டும் விருப்பு.

தாய்சொல்லு மம்மொழியே தம்மக்கள் சொல்லுவதால்
தாய்நன்று சொல்லல், தலை.

## 4. மகன்.

நாடுகுலப் பேரை நனிவளரச் செய்துயரும்,
பீடுடைய மக்களே பேறு.

இல்லி னுயிர்க்குறியா மின்மக்க ளின்செயலே,
சொல்லுமோர் நாட்டின் சுடர்.

பெற்று வளர்த்தன்பு பேணும் பெரியோர்க்கே
யுற்றபயன் மக்க ளுயர்பு.

புகழும் முதுமையிலே போற்றும் பணிகள்,
மகன்பெற்றோர்க் கீயும் மதிப்பு.

இளமையிற் பெற்றோர்; இயலா முதுமை,
† முளைபெற்றோன் போலும் முறை.

## 4. சுற்றம்.

நல்லாற்றி னின்றெவர்க்கும் நற்றுணை செய்பவனே
யெல்லார்க்கு மேயுறவென் றெண்.

பாகத்தி லல்ல; பரிந்த வுதவியினில்,
தேகத் துணைவனை தேறு.

இரத்தக் கலப்பெனினும், இன்னுமை செய்தக்கால்,
அத்தகையார் யாரோ வறி.

தூயமன நேயன் றுணையாயின் வாழ்விற்குக்
காயநலம் பெற்றுயே காண்.

நற்குண நண்பன் நலனீயும் வன்சொலினுந்
துற்குண னின்சொற் றுயர்.

குடும்பவியல் முற்றிற்று

† மகன்

# 10. முயற்சியியல்.

## 1. ஈகை.

சேர்த்தென்ன செய்வாயோ; சேர்த்து மறந்தவரைப்
பார்த்தறஞ் செய்வாய் பரிந்து.

வந்த விருந்தின்வகைசாதி யெண்ணாது,
தந்த தனுவே தகை.

எவ்வுழியு மெத்துணையு மீதல் மிகவினிதே,
செவ்விநலஞ் சேர்க்குந் திரு.

மிடியிருள் நீங்க மெலிந்தோருக் கீதல்,
படியில் நலமாம் பயன்.

ஈகையுள் ளீகையா மின்கல்வி; பெற்றவனுக்
கேகுழி யெங்கு மிசை.

## 2 முயற்சி.

தங்கு முயற்சியாற் சாராத தொன்றில்லை;
* கங்கை கொணர்ந்தோன் † கரி.

இரப்பான் இழப்பான்; இளகியே யிய
வுழைப்பானைச் சேரும் உயர்பு.

நம்பு, நினை, முயல்; நாடொருமை; ஞானமாம்
இன்பம் பெருகும் இனிது.

முயற்சிக் களிப்புற்றே மூவழுக்கு மேகின்,
துயர்வினை யில்லை துணிபு.

முயல்வானைச் சேர்ந்திடுமே முன்றிருவே சோம்பித்
துயில்வானைத் தௌவை தொடர்ந்து.

* பகீரதன். † சாட்சி.

## 3. கைத்தொழில்.

எத்தொழிலின் கைத்தொழிலே யேற்றமாம்;
அற்றூர் திறமற் றவர்.

நாட்டுத் திரவியமங் நாட்டாரே துய்த்திடவே [அத்தொழிலே,
யீட்டும் முயற்சி யினிது.

† இன்மை யிருளே யிடவலமாம் பாவக்கை;
நன்மைத் தொழிலால் நலி.

தன்னுடைக் கேயயலைச் சார்ந்திருக்கு மப்பேதை
தன்னிலெவன் கேடடைவன் சாற்று.

தன்மட்டில், தன்குடியில், தான்செய்யுங் கைத்தொ
தன்னாடு வாழுந் தழைத்து. [ழிலால்,

## 4. உழவு.

ஒருபயி ராக்கி யுணவீவான் பாரிற்
பெருமகன் என்றவனைப் பேசு.

பயிர்செய்வான் வாழ்க்கையே பாங்குமற் றெல்லாம்
அயல்சார்ந்த வாழ்வே யறி.

தானுழு துண்பான் றனிவாழ்வே மண்ணுலகில்
ஊனிலதாம் வாழ்வா யுறும்.

ஏரின் றொழிலின்றேல், ஏதுாரஃ தின்றேலிப்
பாருலக மேதோ பாந்து.

கலப்பை யிராட்டினமுங் கைக்கணியா யெய்தின்
நிலவறுமை நீக்குமே னின்று.

† வறுமை, மடமையே பாபம் என்னும் கவந்தனுக்கு இடது, வலது கையாம்.

## 5 பொறிகள்

ஆற்றலைப் போக்கி யடிமைப் படுத்திடுமே,
போற்றுதல் போலப் * பொறி.

ஏரோசை நெஞ்சம்; இராட்டினத்தி னின்னோசை
பாரினோங் காரவிசை பார்.

கலப்பை யிராட்டினமே கண்ணிலத்தி னோர்க்கே,
நலமா ருயிர்நிலையாம், நாடு.

பொறியா லொருவன் பொருளெய்தும்; ஏழை
வறுமை யுறுவான் மதி.

அயற்பொறி தேயத்தின் ஆக்கத்தை யெல்லாந்
துயில்தந்து கொள்ளுந் துணிந்து.

முயற்சியியல் முற்றிற்று.

* யந்திரம்.

# 11. பிணியறுவியல்.

## 1. பிணி

பசியும், நசையறு பட்டாவிப் பூவே,
வசையறுந் தோங்கிடும் வான்.

தீயமனத் தாலுந் * திறம்பு செயலாலும்,
நோய்பிறக்கு மென்றே நுவல்.

தூயவுடை யூணுந் துணையாயின் நல்வாழ்க்கை,
நோயேன்? மருந்தேன்? நுவல்.

* அறவழியில்லாப் பிழைநடத்தை.

உண்ணு விரதம் உடலின் பிணிபோக்கித்
திண்கருத்து மீயுந் திறம்.

† வாழ்வுழைப்புக் கூலிசிறு மக்கள் வருந்தாதே
யேழ்மைபோம் நாளே யினிது.

## 2. பணம்.

பணத்தா லுலகு படுதுயரைப் பார்மின்!
குணத்தோரும் வீழுங் குழி.

அடிமை, கொலை, பாவம், ஆசைமிடி யெல்லாம்
* படர்பணத்தா லாகும் [] பவம்.

பண்டமாற் றுந்தன் பயிராகிப் பொன்குறையின்,
மண்ணில் மகிழுமாம் ‡ மா.

விளைபயிர்செய் யேழை வெருளவே தூங்கிக்
களிபணத்தன் றீதசனைக் காண்.

நாணயமா மப்பெரிய நற்குணமுங் கொல்லி,
§ நாணயந் திருவதெந் நாள்!

## 3. இடம்பம்.

தேவைக்கு மேலாகச் சேர்த்தல் திருட்டேயாம்;
பூவிலும் எழ்மை புகும்.

இடம்பந் தொலைந்தெங்கும், இன்பத் தொழிலோச்சித்
துன்ப மிடியைத் தொலை.

விவகார மற்றே விரும்புதமர் நீதி
நவையின்றி யீதல் நலம்.

† உலகம் உயிரோடிருக்க, இன்றியமையாத உழைப்பு.
* பகையானபணம். [] பவம் † ஆகும் ; உற்பவமாகும்.
‡ திருமகள். § மதிப்பு

கட்கஞ்சாத் தியிலைகள் காப்பி யிடம்பமிலேல்;
இப்புவியி லேதுமிடி யே.

வீணணி யாடை விருந்து மணச்செலவு,
காணுமை யின்கருவி காண்.

## 4. உழைப்பும், பயனும்.

உழைப்பும் பயனும் உழைப்போர்க்கே யாயின்,
அழியும் வறுமையெலா மன்று.

விளைவிப்பான், வாங்குவோன், வேறொருவ னின்றேல்,
உழைப்பான் முயற்சியெலாம் ஊங்கு.

புவியின் பயனைப் பொதுவாகத் துய்க்கின்,
புவிவறுமை யேது, புகல்?

புகையிலை கஞ்சாபோற் பொல்லாதன வாக்கேல்;
பகைமதுவுன் பாரேவிப் பார்.

உழைத்துவிளைத் துண்ண வுவந்தா லுலகஞ்
செழிப்பு செழிப்பே செய்யும்.

## 5. பழுதறு வாழ்வு.

நூற்றுத் தறிநெய்தல், நூலறிதல், ஏருழவும்,
ஆற்றலுல கிற்கிவையே யாம்.

செய்யுங் கிணறுஞ் சிறுகுடிலுங் கால்நடையுங்
கையு முழக்களிப்பு காண்.

நெல்முதலா மூண்பயிர்கள் நீணிலத்தி லோங்கிடவே,
நல்கிடும் பேறினையே நாடு.

உடையுணவிற் கான வுலசமிக்ச் செய்யின்,
மிடியேது மென்று மிலை.

உழுதாணே, நூற்றுடை, செய்குடிலே யுள்ளான்
பழுதற்று வாழ்பவனே பார்.

பிணியறுவியல் முற்றிற்று.

---

# 12. அரசியல்

## 1. தலைமை.

பாருலக மெங்கெங்கும் பாரோர் உரிமையலால்,
ஓரோர் உரிமையோ வோர்.

குடித்தலைவன் ஓர்குடியே; கோதறுநற் றொண்டைக்
குடியொத்தே செய்வான்; குறி.

குடிகளின் சேவகரே கோக்களெனக் கொள்ளின்,
படியினில் ஏதே பகை?

குடியாற் குடிநன்மை கொற்றரசு போற்றின்,
மிடி, பிணி யேதே விளம்பு.

குடிகளே தேர்ந்திதமாய்க் கொண்டவனே கொற்றன்;
நடுநிலைசேர் நாட்டத்தி னன்.

## 2. அமைதியினறு.

பார்தழுவும் நல்வழியிற் பண்பினா சாண்டிடலே,
சீர்பெற்று வாழுந் திறம்.

அடக்குவதி லில்லை; அளித்தலே சீர்மை,
கொடுக்கும் அமைதியெதிர் கொண்டு.

அச்சத்தை முற்றும்விட் டன்புமதம் பூணரசிற்
கெச்சமயத் தாரே † யிகல்?

பரிசனமுஞ் சட்டம், படையென் பயக்கும்?
உரிமை தருநெறியே யூக்கு.

சத்தியமே வன்மையெனத் தங்குங் குடியரசே
எத்திசையு மெய்து மிசை.

## 3. கொடுங்கோல்.

நாட்டின்முன் னேற்றத்தை நாடாத வேந்துடைய
நாட்டினுங் காடே நலம்.

வாய்கட்டிக் கைபொத்தி வஞ்சமுடன் ஆளரசை
நோய்பலவே வாட்டும் நுழைந்து.

கள்ளுண் விழைவாற் கனகங் கவாரசன்,
நள்ளிரவிற் கள்வனும்; நாடு.

அடக்கு முறையாலே யாண்டசெய வேந்தன்
இடமகன்ற பூவி லிலே.

குடிகளோ டொவ்வாத கொற்றவன் நாட்டில்,
மூடியாதே யோங்கும் முரண்.

## 4. அரசின்கடமை.

பஞ்சமிருள், நோய்மிடியைப் பல்லாற்றிற் போக்கிடுமச்
செஞ்செயலின் மன்னே திறம்.

ஆராய்ந்து போற்றி யனைவோருந் தேர்ந்தெடுத்த
பாரா ளவர்தோட் படி.

† பகை

நீதிசுகங் கல்வி, நிறைவாழ்வின் றேவையெலா
மீத லெளிதா யினிது.

அன்புசெய் தன்மை யடையாத மன்னவனே,
துன்பினு லாளுந் துணிந்து.

உலகளவு செல்வமெலா முற்றென்ன மெய்யாம்
பலவழியி யாக்காற், பரிந்து?

## 5. படை.

படையாலே யென்னுகும் பாரோரே கூடின்,
இடையன்பு சூழா விடம்.

இன்னொரு நாட்டை யிகல்கொள்ளின், நாளையதை
வென்றொரிகல் கொள்ளும் வியப்பு.

பொறையுறுதி யொற்றுமையும் பூண்டோர்முன் சேனை
நிறையரசன் வீழ்வான் நினை.

வெடிமருந் தேசெய் விலங்கோரிப் பாரில்,
அடைவார் கொலையே யறி.

ஆயுதச் சேனை யரசு பயத்தாலே
தேயத்தி லேசெய்யுந் தீது.

அரசியல் முற்றிற்று.

---

# 13. குடியியல்

## 1. தேர்தல்.

குடிகள் மனந்தனதாய்க் கொண்டோரின் கையில்,
இடமகல் பூவின் இருப்பு.

சனந்தேர்ந்து போற்றிடுமச் சான்றோர் குழுவே,
மனமுவந்த பாராளும் மன்று.

தேர்ந்தோர் மனத்தின் றிறமே யாசதனால்,
தேர்தலிற் றன்மை தெரி.

தேர்தற் குறிப்பிற் சிறந்தோரைத் தேர்ந்தெழுதல்,
ஆர்புவியோ ரின்கடனென் றுப்.

அறநினைவோ டாற்றல்,அறிவழகு நன்மை
சிறந்தோரைத் தேர்தல், திறம்.

## 2. வரி, சட்டம்.

மனக்குடி மக்கள் மகிழ்விதிகள் தம்மைத்
தனையெண்ணு தாக்கிடலே சால்பு.

தேவைக்கு மேலாகச் சேர்பொருளுக் கேவரியாம்;
ஏழைக்கும் அல்ல விது.

கல்வி தொழிற்சுகமுங் காப்பு கொளுஞ்செலவிற்
கெல்லையினீ தல்வரியென் றெண்.

உழைப்போர் நலமெய்த வுற்றிடுமவ் வாட்சி,
தழைக்குந் தருமத்திற் றூன்.

ஏழைக்கே நீதி யினிதருளா மன்றுகளிற்
பாழடையேல் பஞ்சாயம் பார்.

## 3. பொறுப்பு.

தானமுயர் செல்லச் சனசேவை யின்பொறுப்பே
மாணப் பெருகும் மதி.

தன்னறிவுந் தன்மதிப்புந் தாய்மொழியுந் தாழாத,
தன்னயமில் லாட்சிமுறை சால்பு.

பஞ்சம், மடமையும் பாரை வருத்திடினே,
செம்மையிலே யாட்சிமுறை தேர்.

நேயமன மில்லா நெறியில் லதிகாரங்
காசினியி லஃதே * கடு.

பெரியோரும் ஒத்துழையாப் † பீடின்மை தன்னை
யறிந்தவரைப் போற்றலறி வாம்.

## 4. தீமைவெல்லல்.

தேயத்தின் நோயைத்தன் நோயெனவே தீர்த்திடலே
தேயத்தார் செய்கடனே தேர்.

வரியுடனே சேனை மனவுறவி யாக்கால்,
அரசினது நோயகலு மாம்.

கூறுவதைக் கேட்கினுமே கோதுடனே யாகுமெனிற்
கூறுவரோ யாருமே கோள்.

* கனகன்சேய் போன்ற கருத்துறுதி யோடே
வினைத்தீமை தன்னைநீ வெல்.

உண்மை, பொறுமை யுறுவலிமை நன்மனதால்,
இன்னலாஞ் சட்டம் எதிர்.

## 5. ஆட்சிமுறை.

அதிகாரம் மட்டாய் அதிகஞ் சுயேச்சை
விதிசிலவாம் ஆட்சி விரும்பு.

* நஞ்சு † பெருமையில்லாமை
* பிரகலாதன்.

† சிற்றூரிற் றேயந் தெரியுந் திறத்துடனே,
வற்றும லோங்கிடவே வாழ்.

* பஞ்சாய மேமுதலாய்ப் பாராள் அவைவரையில்,
ஐந்தைந்தாய்த் தேர்தல் அழகு.

வறுமை தவிர்தொழிலும், வாய்மை பெருக,
மடமைக்கீ ஞான மருந்து.

தாழ்மை,சீர் தன்னுதவித் தன்மையோ டுண்மையும்,
வாழ்குடிகட் கோங்க வழக்கு.

அறநூல் குடியியல் முற்றிற்று.

† கிராமம்.. கிராமசுயாட்சியே தேசசுயாட்சி.

* ஐந்தைந்தாய்த் தேர்தல்:—(1) கிராமசமுதாயம் பஞ்சாயத்து சபைதேர்தல் (2) தாலுக்காவிலுள்ள பஞ்சாயத்துகள் தாலுக்கா பஞ்சாயத்து ஐவரைத்தேர்தல் (3) அப்படியே தாலுக்காப்பஞ் சாயத்தார் ஷை ஜில்லாப்பஞ்சாயந் தேர்தல் (4) அவர்கள் மா காணப்பஞ்சாயந் தேர்தல் (5) இவர்கள் நாட்டுப்பஞ்சாயந்தேர் தல். இந்தஐவரும் முறையே கல்வி, தொழில், சுகாதாரம், காப் பு, அறவுணர்ச்சி இவ்வைந்தையும் பொறுப்பேற்பர்.

---

# 14. சாந்தவியல்.

## 1. சாந்தம்.

என்றுங் களிப்பெய்தி யென்வரினுஞ் சோர்வின்றி,
நின்றநிலை சாந்தம் நினை.

நினைப்புசெயல் தூயதுவாய், நெஞ்சமரு ளூன்றி
யனைத்துயிரு மின்புறவே யாற்று.

உறவுந் துணையும், ஒளியாமுன் னோர்மா;
பிரிந்தவையாய்ப் பொன்றும் பிற;

* கருத்தி லொளிவைத்துக் கன்னூலிற் றேடல்,
எரியத்தீ தேடல் இது.

## 2. வறுமை நீக்கல்.

சொற்போரும், விற்போரும், பொற்போருஞ் சோருமே
நெற்போரொன் றில்லா நெறி.

சிறுமை, மடமையுஞ் செய்தொழிலிற் சோம்பல்,
வறுமை வளர்க்கும் மகர்.

மண்ணைத் திருத்தியுணு மண்ணில் மயங்குபவர்,
என்னபய னீவார் இவர்.

ஆயிரம் பேர்தங்கு மிடத்தை யடைத்தொருவன்
தீயதுசெய் துண்ணுவதைத் தீர்.

ஆடை யுணவுநல் லாற்று னடைந்தக்கால்,
ஏழை யுலகி லிலை.

தனிமைத் தவநலமுஞ் சான்றாண்மைத் தொண்டும்,
இனிய வுயிர்த்துணையென் றெண்.

* மனம்ஒருமைப்பட்டு சாந்தனிலை தேடுவோருக்கு படிப்பும், உரு வழிபாடும் வேண்டுவதில்லை. முன்னே கடவுளியல்,2-ம் அதிகாரத்தில் 'உருவைத்தொழுதெண்ணி' என்பது ஒருமனப்படுவதற்குச் சாதகமாகவே சொல்லப்பட்டது. உருத்தொழுகை ஒரு மனப்படுத்தற்கே ஒருசாதனம். மனம் ஒன்று பட்டு, தியானம் நிலைத்தால் கருத்தொளியைக் காணலாம். உருவேகடவுள் அல்ல.

## 3. அடிமையாகாமை.

* அடிமைப் புலைஞன் அணுகாமை வேண்டும்;
மடமையிருள் போக்க மனம்.

† பத்தா றுடனைந்திற் பற்றில்லாப் பண்பினோர்
புத்தேளி ராவர் புவி.

தமக்காக வாழுமாஞ் சாலம்; மக்கள்
பிறர்க்காக வாழ்வர் பெரிது.

பலமும் படையுமே பாங்குறுவ தென்னின்
விலங்கே யடையுமாம் வெற்றி.

அன்பறம் நன்றியிவை செய்திடுநல் லாற்றலிலேல்,
என்னென்ப தாளை யினி?

## 4. உயர்களிப்பு.

எத்துணை, எத்துணை யிவ்வுலகின் றொண்டுசெய,
அத்துணை, அத்துணை மாண்பு.

நல்லோருக் கூறும் நலஞ்செய்யும், அல்லோர்க்குச்
செல்வமுஞ் சேர்க்குந் துயர்.

தெய்வ வொளிதனையே தேடு; பிறவெல்லாம்
பொய்யாகும் நீர்க்குமிழி போல்.

* சாதியால் சண்டாளன் என்பதை ஆசிரியர் ஒப்புவதில்லை. பிறந்தவரெல்லாம் சிறந்தவரே. அடிமைத்தனமே ஆன்மப் பசுவைக் கொல்லும் புலையன்.

† பத்து: காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மச்சரம், ஈர்ஷை, டம்பம், தர்ப்பம் ஆசூயை. ஆறு: அறுசுவை: ஐந்து: ஐம்புலன்.

கற்பமும் மூச்சும் உடற்குக் கருமநலம்
எப்போதும் ஆவிக்கே யின்பு.
பிறர்க்காக வாழ்வே யிறவாமை; பீடாம்
அறவழி யாற்றல் அறிவு.

### 5. தன்னை ஈசனுக்கீதல்.

சுடர்காற் கடல்புவியைத் தோற்றிநமை யாளுங்
கடவுட்கிந் தனைக் களி.
பைப்பணமும போன்ற பரும வுடலுயிரை
மெய்க்கடவுள் மெய்த்தொண்டிற் பெய்.
எனதென தென்ன லிடாகு மெனறும்
அவனது வென்ன வருள்.
அன்புண்மை யாக வமர்ந்த கடவுட்குன்
அன்புண்மை தன்னை யளி.
உள்ளே யிலகி யுயர்ந்திடுமச் சோதியனை
யுள்ளவுற வீந்தே யுணர்.

அறநூல், சாந்தவியல், முற்றிற்று.

---

## 15. சாதனவியல்.

### 1. பக்தி.

கடவு ளொருவர் களித்துமனத் தெல்லா
விடத்திலு முள்ளவரென் றெண்.

அன்பிற்செய் தொண்டென் றுமற்ப மெனினுமே
யின்பமா யேற்கு மிறை.

பசிக்குத் தொழிலும் பாத்திலே நெஞ்சாய்
இசைபெற்று வாழ்வீர் இனிது.

உணவு முபக்கிவற்றின் ஊங்குணர் தொண்டன்
* மணமின்றி வாழ பதிப்பு

பொன்று வொளியுன்னுட் பொலியும் வசையெண்ணி
யென்றுமிட ரஞ்சா திரு.

## 2. நீதி.

ஓமி னுயரொலியும், உண்மையின் நன்மதமுங்
காமி னிழிவில்லை காண்.

வசை,கோபம் வஞ்சம் வழக்கு விடுத்தே,
நசையற்று வாழு நயந்து.

§ சுற்றும்பேய் நெஞ்சைச் சுருக்கிச் சுகவழியே
பற்றற்று நிற்கப் பயில்.

சுத்தஞ் சுதந்திரமுந் தோற்றுஞ் சமத்துவமே
யித்தலத்தோர்க் கின்ப நெறி.

அன்பருள், இன்சொல், அகிம்சையோ டொப்புரவாம்
உன்னத வெண்ண முறு.

* அருட்பணியே பெரிதாகக்கருதிவோன் பிரமச்சாரியாயிருப்பது மாண்பு. அம்படியே பெண்களும், இல்லறத்தோரும் அருட்பணி செய்கையில் பிரமச்சாரியம் பூணல் நல்லது.

§ இதுவே தன்னை யறியவும், குண்டலி யெழும்பவும் ஆசிரியருக்கு உதவியது.

## 3. ஞானம்.

பிறப்பு மிறப்பும் பெருக்குங் கருமம்;
சிறப்பிழி வீனுந் தெரி.

இன்னுமற் பொய்யாமல், ஈசனொளி யெண்ணி
யுன்னறத் தொண்டி னுழை.

என்னென்ன வெந்துயர்க ளெய்தினு மிவ்வுலகின்
அன்னையை யெண்ணே யகம்.

மனைவிமக் கட்குமேல் மாண்பெறுதொண் டொன்றும்
உனக்கு மிருப்பதனை யுன்.

வஞ்ச மழுக்கா று மையலெலா மற்றநிலை
செஞ்சுடர் சேருந் தெரி.

## 4. வழிபாடு.

இதயம்பூ மந்திரமும் இன்சொல்லா யுன்றன்
றுதியாக வேயருளாய் தொண்டு.

உலகமென் வீடா யுணர்ந்தே யதற்கு
நலஞ்செயும் ஆற்றலே நல்கு!

உண்டுறங் காதுலகி னுற்ற கருமத்தைத்
திண்கருத்தோ டாற்றத் திகழ்!

உன்றன் றிருமுகமே யுன்னிடினே யெவ்வழியுந்
தந்துதவி செய்திடுவாய் தாய்!

மெய்யுணர் வெய்தி யறிவோங்கி மேதினியில்,
உய்வழி யீந்தே யுயர்த்து!

வாழ்த்து!

நல்லவ ரோங்க! நலமோங்கிப் பூவெங்கும்
எல்லோரும் வாழ விசை!

வறுமை யிருள் நீங்கி வையம் வளமெய்திப்
பெருமையாய் வாழ்கப் பிறப்பு!

போரற்றுப் பாரிற் பொறுமை விளங்கியுயிர்
சீர்பெற்று வாழ்க செறிந்து!

உண்மை * யுயிரேண், உறுதிநலத் தொண்டருடன்
என்றும்பூ வாழ்க விசை!

அறமும் அறவோர் அறச்செயலும் பூவில்
உறவுற்று வாழ்க வுவந்து!

அறநூல் சாதனவியல் முற்றிற்று.

* ஆன்மசக்தி.

எல்லா வுலகிற் கிறைவ னொருவன்
எல்லா வுடலும் இறைவ னாலயமே!
ஒளிவள ருலகே! உயர் களிப் பெய்தாய்!
உள்விழி திறந்தற நூலைத்
தெளிதிநீ, சுத்த ஸமரஸ நிலையிற்
றிகழுதி சுதந்திர மாக!
கலியினி யில்லை சத்திய யுகமே
கதிர்விடுங் காட்சியைக் காணாய்!
அளிதரு மமுத வருட்பெருஞ் சோதி
யமரவாழ் வடைதியென் குழந்தாய்!

சுத்தசக்தியருளுக!

சுவாமி சுத்தானந்த பாரதியார் பாடிய
அறநூல் முற்றிற்று.

---

ஓம்.

## சுத்தானந்த பாரதியாரின்

# அறவழி.

அறவழி நன்ருய் அமைபெறு தற்கே,
அறவடி வானதோர் அம்மை துணையே.

அறிவுதேர்ந் தொழுகு
ஆற்றல் பொறுமை
இரப்ப திழிவு
ஈகை நன்று
உவப்பு மிகக்கொள்
ஊறு நினையேல்
எள்ளுவ தொழிக
ஏரில் உழை
ஐந்தை யடக்கு
ஒருமனப் படு
ஓரிடம் நில்லே
ஔடதம் சாந்தம்
எஃகு வீசேல்
கருணை யகங்கொள்
காமிற் கிணங்கேல்
கிளையை மறவேல்
கீர்த்தி பெறவாழ்
குடியா சிரு
கூற்றிற் கஞ்சேல்
கெடுநினை வகற்று
கேண்மை வளர்
கைத்தொழில் தேறு
கொள்கை கடைப்பிடி
கோள்பொய் சொல்லேல்
கௌரவ முறவாழ்
நப்போ லுதவு
சத்தியம் பேணு
சார்பு விலக்கு
சினத்தை யொழிக
சிரிய பணிசெய்
சுத்த முறவாழ்
சூட்டோ டுண்ணு
சென்மப் பயன்பெறு
சேயெனத் தெளிவுறு
சைங்யஞ் சுருக்கு
சொற்றவ ருதே
சோதியுள் நோக்கு
சௌக்கிய நெறிநில்
ஞால மறி
‡ ஞிமிறென வுழை
தன்மதிப் பகலேல்
தாய்மொழி போற்று
திண்மனத் துணைக்கொள்
தீண்டாமை யொழி
துணிந்தற மாற்று
தூக்கஞ் சுருக்கு

‡ வண்டு

தெவிட்டா தறஞ்செய்
தேசப் பணிசெய்
தைரியங் கைவிடேல்
தொண்டு வழிநில்
தோமறு வினைசெய்
தௌவைக் கிடங்கொடேல்
நலஞ்செய் தோங்த
நாட்டது போற்று
நிறையுற் றொழுகு
நீப்பது துறவு
நுட்ப மறி
நூலறிந் தொழுகு
நெசவுத் தொழில்செய்
நேர்பொழு தறஞ்செய்
நைய வினைசெயேல்
நொந்தவர்க் குதவு
நோவு வினையேல்
நௌவென மயங்கேல்
பலமந மொரு*தே
பாரிறை வீடே
பிரித்துல காளேல்
†பீர்சொரிந் தழுகேல்
புனிதனை யெண்ணு
பூப்பயன் பொதுவே
பெண்மை கற்பு
பேர்நசை யடக்கு
பைம்புல னுலவு
பொதுநல மிகச்செய்
போர்நசை போக்கு
‡பௌவ மெய்யறி
மங்கலம் பேசு
மாதரை மிகமேல்
மிடிப்பிணி நீக்கு
மீத்துச் செலவிடு
§முப்பகை போக்கு
மூத்தோர் உரைகொள்
மெய்வலி பெருக்கு
மேலோர் குழுவிரு
மையல்கொண் டலையேல்
மொழிபல பழகு
மோசஞ் செய்யேல்
மௌனம் பேணு
வயிற்றை வணக்கு
வாத மொழிக
விடுதலை வெறிகொள்
வீர னெனவாழ்
வெறுமை காட்டேல்
வேலைசெய் துண்ணு
வைத்தியன் இயற்கை
வௌவு நசைவிடு
யாக்கை கோவில்
யோகம் முயல்க
யௌவன மனங்கொள்
இராப்பக லெண்ணு
இலௌகி கந்தெரி
முப்போல் சிறந்திடு
அளவோ டாற்று
அறந்தனை வணங்கு
உறுதி மிகக்கொள்
மனந்திறந் தருள்சேர்
தனைத்தோர்ந் திலகாய்!
அனைத்தும் வாழி!

*கடவுள் †கண்ணீர். ‡ சமுத்திரம், § காமம், வெகுளி, மயக்கம்.

# தமிழ் விருந்து!

சுத்தானந்த பாரதியாரின் அரும் பெரு நூல்களின், தெய்வ மணமும், தேன்றமிழ் இன்பும், வீரத்திருவும், பொருட்சுவையும் தமிழர் அறிந்ததே. அவர் எழுதி இன்னும் வெளியிடாத பற்பல வசன நூல்களை நாங்கள் சிறுகச்சிறுக வெளியிட முன் வந்துள்ளோம். ராணாப்ரதாப், குருகோவிந்தன், சிவாஜி, பத்மினி, ருக்மாஙகதன், மீராபாய், ழாந்தார்க் போனற பல நாடகங்கள், உலக வியல்பு, இந்தியை, சக்தி சாதனம், சுத்த மதம் போன்ற நாவல்கள், உலக வீரர் சரிதை வீரவிருந்து போன்ற வீர நூல்கள், அறிவு நூல்கள், புவி நூல்கள, "பாரதசக்தி" போன்ற பெருங்காப்பியங்கள், அருளொழுகும சக்தி கீதங்கள், பாரத கீதங்கள், சுதத சமரஸ கீதங்கள், இயற்கைப் பாட்டு, முதலிய கீர்த்தனைகள், உயர்பொருள் அடங்கிய வியாசங்கள், யோக ரகசியங்களைப்பற்றிய நூலகள் எல்லாம் பாரதியார் தமிழ் நாட்டிற்குச்சேர்த்து வைத்திருக்கும் அருநிதி யன்றோ? அதைத் தமிழ் மக்கள் அனைவரும் நுகர்ந்து நின்று பயன் பெருவான் வேண்டி நாங்கள் தமிழரின் தமிழன்பை உறுதிகொண்டு வெளியிட முன் வந்துள்ளோம. பாரதியாரின் நூல்களை வெளியிட வெளியிட உடனே வாங்குவதாக சுமார் 1000 அன்பர்களாவது முன்வந்து எமக்கு எழுதினல் விரைவில் அன்பருக்கு ஒரு சிறந்த கவியின் தமிழ் விருந்து தெவிட்டாது கிடைத்துக் கொண்டிருக்கும்.

ஓம் சக்தி.

இயற்கை யில்லத்தார்,

புதுக்கோட்டை (S. I. R.)

# சுவாமி சுத்தானந்த பாரதியார்

இயற்றிய

## அரிய தமிழ் நூல்கள்

---

(1) அறநூல் (மூலம்), சுத்தப் பதிப்பு அணா 3

(2) ஷை மூலமும் உரையும் ... ... ,, 12

(3) ராமகிருஷ்ணாமிருதம் ... ... ... ,, 6

(4) ஏசு கிறிஸ்துவின் ஜீவிய சரித்திரம் .... ,, 6

(5) புத்த விஜயம் ... ... ... ... ,, 4

(6) ஜராதுஷ்டிரன் ... ... ... ... ,, 1½

(7) பாரத கீதம் பாகம் I & II ... ... ,, 4

(8) வீர சிவாஜி விஜயம் ... ... ... ,, 3

(9) ஜிநாநந்தம் ... ... ... .... ... ,, 8

இயற்கை இல்லம்,

புதுக்கோட்டை.

மாடர்ன் பிரஸ், புதுவை.